தஞ்சபுரீஸ்வரர் ஆலயத்திற்கு தென்மேற்கிலும், கரதலேஸ்வரர் ஆலயத்திற்கு மேற்கிலும் இருக்கின்றன. புண்ணியம் மிகுந்த அந்த தீர்த்தத்திற்கு " சிவகங்கா " என்று பெயர். இந்தப் பொய்கையில் நீராடினால் நீராடியவன் செய்த அனைத்துப் பாவங்களையும் களைகிறான். கொங்கணேஸ்வரரின் ஆலயத்திற்குத் தெற்கில் "சக்திகூபம்" என்ற பெயரில் ஒரு கிணறு இருக்கிறது. அக்கிணற்றுக்கு மேற்குத்திசையில் கந்தப்பெருமானுடைய ஆலயம் இருக்கிறது. (இவ்வாலயம் இன்றும் காணப்படுகிறது) கார்த்திகை மாதம் கார்த்திகை நட்சத்திரத்தன்று இந்த கந்தனை தரிசித்தால் மிகுந்த புண்ணியம் பெறலாம். (தற்போதுள்ள கொங்கணேஸ்வரர் ஆலயத்தில்) அங்கு கரனால் பூஜிக்கப்பெற்ற லிங்கங்கள் ராசிகளின் அமைப்பில் சக்தி கூபத்திற்குத் தெற்கில் காணப்படுகின்றன.

ஸ்ரீகரதலேஸ்வரர் ஆலயத்திற்கு வடக்குத் திசையில் நிர்விக்ன நிமித்தமாக துந்தில விக்னேசர் (தொப்புள் பிள்ளையார்) ஆலயத்தை முதலில் நிர்மாணம் செய்விக்க வேண்டும். அதன்பிறகு "தேவர்களால் தோண்டப்பட்ட நிலப்பகுதி இது" என்று சிற்ப வல்லுனர் கூறுகின்ற இந்த நிலப்பகுதியில் மன்னன் கரிகாலனைக் கொண்டு உயர்ந்த கோபுரம் கட்டுவிக்கச் செய்வாயாக கணபதி, முருகன், தேவி ஆகியவர்களுக்கு மூலபீடம், பிரகாரங்கள் முதலியவைகளையும். தலைவாயில் உயர்ந்த இரண்டு கோபுரங்களையும் கட்டுவிக்கச் செய்வாயாக. இவ் வாலயத்தின் கர்பக்கிருஹத்தில் பிரதிஷ்டை செய்யும் லிங்கத்திற்காக அரசனை நர்மதை நதிக்கு நீ அழைத்துச் செல். அங்குள்ள ஓங்கார குண்டத்தில் பக்திஸ்ரத்தையுடன் ஸ்நானம் செய்யும்போது இரண்டு பாணலிங்கங்கள் மன்னன் கையில் அகப்படும். அவன் அந்த பாணலிங்கங்களைக் கையில் எடுத்த உடன் அந்த பாணங்கள் இரண்டும் ஒன்றாகிவிடும். அதை நர்மதையின் நீரிலேயே போட்டு விடவேண்டும். மீண்டும் ஒரு பாணலிங்கம் மன்னன் கையில் கிட்டும். மூன்றாவதாக கிடைக்கும் பாணலிங்கம் மிக உத்தமமானது. மிகச்

சிறிதாக (சூக்ஷ்மமாக) இருக்கும். கரைக்கு எடுத்து வந்ததும் அந்த சிறிய பாணலிங்கம் பெரியதாக வளரும். அதன் பெயர்தான் "பிருகதீஸ்வரர்" என்று "ஸ்ரீருத்ரம்" அழைக்கிறது. இதனை எடுத்துக்கொண்டு வருவதற்கு வியாபாரிகள் வருவார்கள். அவர்கள் பிரஹதீஸ்வரரை வழிபடுவார்கள். சக்ரம், யந்திரம் முதலியவற்றுடனும் புஷ்யமண்டபம் முதலியவற்றுடனும் ஆலயத்தை நிருமானித்து வழிபட வேண்டும். ஆதி சைவகுலத்தில் தோன்றிய சிவசேகரனின் முன்னோர்களை திருவையாற்றிலிருந்து வரவழைத்து அவர்களைக்கொண்டு அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம் செய்விக்கப்பட்டு பூஜிக்க வேண்டும். அப்போது நான் பாதாள மூலாந்தம் அந்த பாணலிங்கத்தில் பிரவேசிப்பேன். என்னை தரிசனம் செய்பவர்களுக்கு விசேஷசமான பலன் கிடைக்கும். அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய புருஷார்த்தங்களைக் கொடுப்பேன். சிவகங்கையில் நீராடி, பெருவுடையாரை தரிசனம் செய்து தூப, தீப, வில்வம் சாற்றினால் எண்ணுவார் எண்ணியது (மனோபீஷ்டங்களை) ஈவேன். இதைப் போலவே பிருஹன்நாயகிக்கும் ஆலயம் எடுப்பாயாக. எனக்கு முன் நந்திகேஸ்வரனையும் மிக உயரமாகச் சமைப்பாயாக. அந்த நந்திக்குத் தென்மேற்குத் திசையில் மற்றொரு நந்தியையும் அமைப்பாயாக. பெருவுடையாருக்குத் தெற்கே அகோரமூர்த்தி ஜ்வரஹரேஸ்வரரையும் முறைப்படி ஸ்தாபிப்பாயாக. பக்ஷ்ய போஜ்யங்களுடன் பூஜைகள் செய்துவரவேண்டும். இவ்வாலயத்தை கட்டுவிப்பதற்காக சிற்பச் சக்கரவர்த்தியாக காஞ்சியில் வாழ்ந்துவரும் ஸோம வர்மா என்பவரை அழைப்பாயாக. இந்தச் சிற்பி காஞ்சி ஏகாம்பரர் ஆலயத்தைக் கட்டியவன். அங்குள்ள சிற்பிகளையும், அந்தணர்களையும் அழைத்து தக்க மரியாதை செய்து பொருள் கொடுத்து மேலே கூறிய வண்ணம் ஆலயத்தை கரிகாலன் கட்டினால் அவனுடைய குஷ்ட நோய் விலகும்" என்று கூறிய சிவபெருமான் மறைந்தார். ஹரதத்தர் தான் கண்ட அற்புதக் கனவைக் கண்டு மனம் மகிழ்ந்தார்.

---

## பன்னிரண்டாவது அத்தியாயம்

**சூதமுனிவர் கூறினார் ;—**

ஹரதத்தர் அதிகாலையிலேயே எழுந்து கங்கையினும் புனிதமான காவிரியில் நீராடி, அக்னீசப் பெருமானைத் தொழுது அந்தணர்களுக்கு அன்னமளித்தார். இறைவனின் பிரஸாதங்களை எடுத்துக்கொண்டு மன்னனை சந்திக்க. சிவிகையில் ஏறித் தலைநகரை நோக்கிப் பயணமானார். தலை நகரின் எல்லையிலிருந்த பட்டீச்சரத்திற்கு (பழையாறை) அருகில் வரும்போதே ஒற்றர்கள் மூலம் ஹரதத்தர் வரும் செய்தியை அறிந்த மன்னன், மந்திரிகள், சேனாபதிகள் புடைசூழ ஹரதத்தரைப் பணிந்து எதிர்கொண்டழைத்து வரவேற்றான். ஹரதத்தரை உயர்ந்த சிம்மானத்தில் அமரச் செய்தான்.

ஸ்வாமி! தங்கள் வரவால் நான் தன்யனானேன். தங்களது தரிசனத்தால் சாக்ஷாத் சிவபெருமானையே காண்பது போல் பெரும் மகிழ்சியடைகிறேன். தாங்கள் எனக்கு இடும்பணி எதுவாயினும் சிவபெருமான் இட்டபணியாகக் கருதுகிறேன். தங்களுடைய கட்டளையைச் செய்யச் சித்தமாக இருக்கிறேன். பணித்தருளுங்கள் என்றான் மன்னன். இதைக்கேட்ட ஹரதத்தரின் முகம் அன்றலர்ந்த செந்தாமரை போல் மலர்ந்தது. "நல்லது" என்று கூறிய ஹரதத்தர் அக்னீசப் பொருமானுடைய பிரஸாதங்களை மன்னனுக்கும், மந்திரிப் பிரதானிகளுக்கும் அளித்தார். மன்னன் கரிகாலன் விபூதியை நெற்றியில் அணிந்துகொண்டான், மந்திரி பிரதானிகள் புடைசூழ அமர்ந்திருந்த மன்னன் கரிகாலனிடம் ஹரதத்தர் தனது நோக்கத்தையும், தான் கண்ட கனவைப் பற்றியும் கூறலானார்,

மன்னா! உன் பொருட்டு ஒருமண்டல காலம் அகனீஸ்வரப் பொருமானை ஆராதித்தேன். இதனால் மகிழ்ந்த சிவபெருமான் விரதகாலத்தின் இறுதியில் ஒருநாள் எனது கனவில் தோன்றினார். அவர் கூறியதின் கருத்தாவது

மன்னன் கரிகாலனுடைய குஷ்டநோய் விலக வேண்டுமாயின் சமீபனத்தில் உள்ள ஸ்ரீ தஞ்சபுரீஸ்வரருடைய ஆலயத்திற்குத் தெற்கேயும், ஸ்ரீ கரதலேஸ்வரருடைய ஆலயத்திற்கு மேற்கேயும் உயர்ந்த கோபுரம் ஒன்றை நீ கட்டுவிக்க வேண்டும். அந்த ஆலயத்தில் பிரதிஷ்டை செய்வதற்காக நர்மதை நதியிலிருந்து பாணலிங்கத்தை எடுத்துவர வேண்டும். அந்த பாணத்தை நல்ல நாளில் பிரதிஷ்டை செய்ய வேண்டும்.

மேலும், அங்கு 'சிவகங்கை' என்ற புனித நீர்த்தடாகம் ஒன்றுள்ளது, அதற்குத் தெற்கே கரனால் பூசித்தலிங்கம் ஒன்று இன்றும் காணக்கிடைக்கின்றது. காவிரியின் தென் கரையில் 'வின்னாறு' என்ற ஒரு ஆறு ஓடிக் கொண்டு இருக்கிறது. அந்த ஆற்றுக்குத் தெற்கே மணிமுத்தா நதி யென்றும் (வடவாறு) ஓடுகின்றது. இந்த நதியில் நீராடினால் மஹா பாபங்கள் தொலைகின்றன. இந்த நதியிலிடும் மனித எலும்புகள் நீராகக் கரைந்துவிடும். வைகாசி, ஐப்பசி, கார்த்திகை, தை, மாசி, ஆகிய மாதங்களில் நீராடி ஐந்து சிவாலயங்களையும் தரிசனம் செய்கின்றவர்கள் கைலாய பதவியை அடைகின்றனர். அங்க பிரதக்ஷிணத்தால் மஹா பாபங்கள் தொலைகின்றன. தொப்புள் பிள்ளையார், முருகப் பெருமான், மற்றும் க்ஷேத்திர தேவதைகளாக நீலமேகப் பெருமான், ந்ருஸிம்ம மூர்த்தி, வெப்பு நோய்களை அழிக்கும் மாரியம்மன், மற்றும் விஜயா, ஏகவீரா, ரேணுகா, காளி, மார்த்தினி, கோடியம்மன் ஆகிய தேவதைகளை ச்ரவண நட்சத்திரத்துடன் கூடிய ஞாயிறு, செவ்வாய், வெள்ளி ஆகிய கிழமைகளில் பூஜித்தால் பூஜித்தவருக்கு இன்பங்கள் உண்டாகும். இந்த க்ஷேத்திரத்தைப் பிரதக்ஷிணம் செய்தால் அனைத்துப் பாவங்களும் அழியும்'' என்று மன்னனிடம் தான் கண்டகனவையும், திருத்தலப் பெருமையையும் கூறினார். ஆகவே மன்னா! நீ விரைவில் காஞ்சியில் புகழ் பெற்று விளங்கும் சிற்பியை அழைத்து உயர்ந்த கோபுரத்தை எடுப்பாயாக. அதில் நர்மதையிலிருந்து

எடுத்துவந்த பாணலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து உனது நோயிலிருந்து நீ விடுதலை பெறுவாயாக. இதை இறைவனுடைய கட்டளையாக ஏற்று, உனது மந்திரிகளின் ஆலோசனைகளைப் பெற்று விரைவில் ஆலயத் திருப்பணியைத்தொடங்குவாயாக!'' என்று ஹரதத்த சிவாச்சாரியார் மன்னனிடம் கூறிமுடித்தார்.

---

## பதின்மூன்றும் அத்தியாயம்

தனது குருவான ஹரதத்தர் கூறியதைக் கேட்டு மகிழ்ந்த மன்னன்,

குருதேவா! சிவனடியாராகிய தாங்கள் கூறியபடியே செய்கிறேன். சுபமான முகூர்த்தமும், லக்னமும் கூடிய தினத்தில் தங்களுடன் நான் நர்மதைக்குச் சென்று லிங்கம் எடுத்துவர ஏற்பாடுகளைச் செய்கிறேன். இவ்விதமே காஞ்சியிலிருக்கும் சிற்பியையும் வரவழைத்துக் கோயிலெடுக்கத் தேவையான ஏற்பாடுகளைச் செய்கிறேன்''. என்று மன்னன் கரிகாலன் கூறியதும் சூழ்ந்திருந்த மந்திரிப் பிரதானிகள் மன்னனைப் பாராட்டினார்கள்.

'மன்னனே! சிவனடியார் கூற சிவத் தொண்டை மேற்கொள்ளும் உங்கள் புகழ் மலைகளும், நதிகளும், சந்திர சூரியர் உள்ள நாள்வரையும் நிலைத்து நிற்கும். சிவாலயம் எடுப்பித்து இறுதியில் சிவப் பேற்றையும் அடைவாயாக இன்றே நன்னாள். இப்போழ்தே நல்ல முகூர்த்தம். உங்கள் பணிகளைத் தொடங்குவீர்களாக, என்று மந்திரிகள் கூறியதும், காஞ்சியில் வாழும் சிற்பி சோமவர்மனை அழைக், கத் தேவையான ஏற்பாடுகளைச் செய்யக் கட்டளை பிறப்பித்தான் மன்னன்.

ஆயிரக் கணக்கான சிற்பிகள் அழைக்கப் பெற்றனர். ஒரு நல்ல முகூர்த்தத்தில் தொப்புள் பிள்ளையாரை மன்னன் வணங்கி பூஜித்து ஆலயம் எழுப்பும் நிலப்பகுதியைத்

தோண்ட உத்திரவிட்டான். கோயிற் திருப்பணி துவங்கியது மன்னன், சிற்பி சோமவர்மாவை அழைத்து அவனுக்குப் பட்டாடைகளையும், பற்பல பரிசில்களையும் வழங்கினான்.

"சிற்பியே! சிவ பெருமானுடைய உத்திரவின்படி சிவத் தொண்டிலீடுபட்டு உயர்ந்த நெடுங் கோபுரம் எழுப்ப முனைந்திருக்கிறேன். எனக்கு நீ உதவி செய்வாயாக. சிற்ப நூலில் கூறப்பட்டுள்ளவாறு நீ கோவிலெடுக்கலாம். உனக்கும், உனது பணிக்கும் எவ்வளவு பொருள் தேவைப் பட்டாலும் அவற்றை நான் அளிக்கிறேன். சிவத்தொண்டுக்கு எனது உயிரையும் கொடுக்கச் சித்தமாக இருக்கிறேன்" என்று மன்னன் கூறியதும் சிற்பச் சக்ரவர்த்தி சோமவர்மா மிகவும் மகிழ்ந்தான். தொப்புள்பிள்ளையார் ஆலயத்திற்கு மேற்கே தனது இஷ்டதெய்வமும், தங்கள் குலதெய்வமுமான காளியம்மனுக்கு ஒரு ஆலயம் எடுப்பித்து "காளியம்மனை, அதில் பிரதிஷ்டை செய்து பூஜித்தான். பஞ்சாமிருதம் முதலியவற்றால் நீராட்டி, தூப தீபங்களுடன் தோத்தரித்து வழிப்பட்டான் சோமவர்மன்.

"தேவி! இந்த க்ஷேத்திரத்தில் நீ என்றும் நிலைத்திருந்து, இங்கு வாழும் மக்களின் இடர்களைக் களைவாயாக. அவர்கள் விரும்பியாங்கு அருள்புரிவாயாக. உனக்கு எடுக்கும் திருவிழாவிற்குப் பிறகுதான் பிருஹதீஸ்வரருக்குத் திருவிழா நடைபெறும். இதனால் நீ மகிழ்ந்து என்றும் மக்கள் சமுதாயத்திற்கு அருள்புரிவாயாக!" என்று வேண்டி வழிபட்டான்.

காளி மகிழ்ந்தாள், 'சிற்பியே! மன்னனின் விருப்பப் படியே நீ பிருஹதீஸ்வரருக்கு ஆலயம் எடுப்பாயாக. இந்த ஆலயத்தை எந்த சிற்பி எடுத்தான்?" என்று மற்ற சிற்பிகளும் வியக்கும் வண்ணம் அமையும். இதில் சிறிதும் ஐயமில்லை. நான் இந்த க்ஷேத்திரத்திலேயே வஸித்து சிற்பிகளுக்கு (கை வினைஞர்களுக்கு) அருள்புரிவேன். வெள்ளி, செவ்வாய் கிழமைகளில் என்னை பூஜிப்பவர் களுடைய விருப்பத்தை நிறைவேற்றுவேன்"என்று கூறிய

தேவி காளியம்மன் மறைந்தருளினுள். இதைக்கேட்டு, சிற்பச் சக்ரவர்த்தி சோமவர்மா மகிழ்ந்தான். வடக்குப் பார்த்த சந்நிதியிலிருந்து கொண்டு காளிகாதேவி மக்களுக்கு அருள்பாலித்து வருகிருள். இன்றும் இத் தேவியை சிற்பிகள் (கைவினைஞர்கள்) ஆராதித்துக் கொண்டு வருகின்றனர்.

## பதினுன்காவது அத்தியாயம்

மன்னன் கரிகாலன் தனது கருவூலத்தைப் பொருள்களாலும், தானியங்களாலும் நிரப்பினுன். ஒவ்வொரு சாலைகளிலும் தண்ணீர்ப் பந்தல்களையும், அன்னச்சாலைகளையும் ஏற்பாடு செய்தான். பெரும் பெரும் பாறைகளை எடுத்துவருவதற்காக எருமைகள் பூட்டிய உயர்ந்த வண்டிகளை அமைத்தான். பல கூலியாட்களும், சிற்பிகளும் வந்து கூடினர். வண்டிப் பாதைகளை நன்கு பராமரிக்க ஒற்றர்களையும் ஏற்பாடு செய்து உரிய அதிகாரத்தையும் அவர்களுக்கு வழங்கினுன். பலமான முன்னேற்பாடுகள் செய்யப்பட்டதைக் கண்டு சிற்பி சோமவர்மா மனமகிழ்ந்தான். ஒவ்வொருவருக்கும் பணிகள் வகுக்கப்பட்டன. குன்றுகள் பிளக்கப்பட்டன. எங்கும் சிற்றுளிகளின் ஒலி பேரொலியாக ஒலித்தன.

சிற்பிகளிடம் மன்னன் கரிகாலன் வேண்டுகோள் விடுத்தான். "சிவபெருமானுடைய ஆணையின்படி நான் சிவத்தொண்டு செய்ய விரும்புகிறேன். பெருஞ்சிற்பியான சோமவர்மாவுடன், நீங்கள் சிற்பநூலில் கூறிய வண்ணம் சிற்பங்களைச் செதுக்குங்கள். உங்களுக்குத் தேவையான பொருட்களை மந்திரிகளிடம் தெரிவித்தால் அவர்கள் உங்களுக்கு அளிப்பார்கள். நானும், எனது குருவும் நர்மதை நதிக்குச் சென்று லிங்கத்தை எடுத்து வருவதற்காக நாளை அதிகாலையில் புறப்படுகிறேம். ஆகவே நீங்கள் கோயில் திருப்பணியில் சோமவர்மனுடன் பங்கேற்று திருப்பணியை நிறைவு செய்வீர்களாக" என்றுன்.

அருகிலிருந்த மந்திரிகள் மன்னு! தாங்கள் கட்டளை யிட்டவாறே செய்கிறோம். இன்று அதிகாலை எம்பெரு மானைக் கனவில் கண்டோம். அப்போது "நீங்கள் அறுபத்து நான்கு வகை வியாபாரமடங்கிய வியாபாரி களுடன் நர்மதை நதிக்குச் சென்று இலிங்கப் பெருமானை எடுத்து வரும்படிக் கூறினுர்." என்று மந்திரிகள் கூறியதும் அந்த வியாபாரிகள் அழைத்து வரப்பட்டனர். அவர் களுக்குத் தேவையான பொருள் அளிக்கப்பட்டன. அவர் களும் தொப்புள் பிள்ளையாரை வணங்கி வேண்டிக் கொண்டனர். அவர்களுடைய வேண்டுதலுக்குச் செவி சாய்த்த விநாயகப் பெருமான் தான் தெற்குமுகமாக எழுந்தருளியுள்ள கோலத்தை மாற்றி மேற்கு முகமாகத் திரும்பி அருள்புரிந்தார்,

மன்னன், தனது குருவான ஹரதத்தர், மற்றும் வணிகர்களுடன் நர்மதை நதியை அடைந்தான். அங்குள்ள ஓங்கார குண்டத்தில் நர்மதை நதியில் நீராடினுன். நீரில் மூழ்கி எழுந்ததும் இரண்டு பாணங்கள் கிடைத்தன. அவற்றை நீரிலேயே விடுத்தான். மூன்ருவதாகக்கிடைத்த 'பாண' த்தை நதியின் கரையில் வைத்துப் பூஜித்தான். அதைக்கண்டு மன்னனும், ஹரதத்தரும் பெருமகிழ்ச்சி கொண்டனர். ரதத்தில் மலர் மண்டபம் அமைத்து அதில் அந்த பாணலிங்கத்தை எழுந்தருளுவித்தனர். பலவித வாத்தியங்களின் பேரொலியும். அந்தணப் பெருமக்களின் வேதவொலியும் சேர்ந்து முழங்கின. நர்மதை நதியி லிருந்து ரதத்தின் மூலமாக புறப்பட்ட பாணலிங்கம் ஸமீவனத்தை அடைய (தஞ்சாவூரை அடைய) ஆறு மாதங்கள் உருண்டோடின. தஞ்சபுரீஸ்வரர் ஆலயத்திற்கு முன்னுல் இந்த பாணலிங்கத்தை (பாலாலயமாக) ஸ்தாபித்து தூப, தீபங்களுடன் ஆதிசைவ அந்தணர்கள் மூன்று வேளைகளிலும் ஆராதித்து வந்தனர். உடன் வந்த வணிகர்கள் தன-தான்யங்களால் வழிபட்டனர். குருவான ஹரதத்தர், அரசன், அரசி ஆகியோர் பெருமகிழ்ச்சியுடன் நகருக்குத் திரும்பினர். நெடுங்கோபுரம் எடுக்குர்வரை

தஞ்சபுரீஸ்வரர் ஆலயத்திலேயே (பாலாலயமாக ஸ்தா பனம் செய்து) ஆராதித்து வந்தனர்.

## பதினைந்தாவது அத்தியாயம்

சிற்பி சோமவர்மாவுடன், ஆயிரக்கணக்கான சிற்பிகள் பன்னிரண்டு ஆண்டுகளாக உழைத்து பல சிற்பங்களையும், உயர்ந்த கோபுரத்தையும் அதற்கு எதிரில் மிகவுயர்ந்த நந்திகேஸ்வரரையும், வெளிப்புறத்தில் இரண்டு கோபுரங்களையும் கட்டிக்கொண்டு இருந்தனர். ஆலயம் சிற்பநூலில் கூறப்பட்ட வண்ணம் அமைக்கப்பட்டுக் கொண்டிருந்தது மன்னன் கரிகாலன் காஞ்சியிலிருந்த சோமவர்மாவை மன்னன் அழைத்த சமயம் அவனுடைய மனைவி கருவுற்றிருந்தாள். சோமவர்மா தஞ்சைக்கு வந்தபிறகு அவனது துணைவி ஒரு அழகிய ஆண்குழந்தையை யீன்றெடுத்தாள். குழந்தை வளர்ந்து வந்தான், ஆண்டுகள் மறைந்தன. பன்னிரண்டு வயதுச் சிறுவனாக வளர்ந்து நின்றான். சிற்ப நூல்களைப் பயின்று தனது தந்தையைப் போலவே சிறந்த சிற்பியாக ஆகவிரும்பினான், சிறுவன். சிற்றுளியால் கற்களைச் செதுக்கத் தொடங்கினான்.

ஒருநாள், தனது தாயை வணங்கி, "அம்மா! எனது தந்தை எங்கே இருக்கிறார்? அவரைக்காண விரும்புகிறேன்". என்றான். தாயார் அவனை அன்புடன் அணைத்துக்கொண்டு "குழந்தாய்! உனது தந்தை சோழமன்னனின் அழைப்பை யேற்று, தஞ்சை நகரில் மிகயுயர்ந்த கோபுரம் எழுப்புவதற்காக தஞ்சாவூர் சென்று இருக்கிறார். அவர் இப்போது அங்கு, கோவில் கட்டும்பணியில் ஈடுபட்டிருக்கிறார். நீ அங்கு சென்று உனது தந்தையைக் காண்பாயாக. மேலும் நீ விரும்பும் பொருளையும் மன்னனிடமிருந்து பெற்றுக்கொள்" என்று தாய்கூறியதும் அந்தச் சிறுவன் தனது தாயை வணங்கி, "தந்தையைக் கண்டு, அவர்கள் செய்துவரும் சிற்பங்களையும், அவற்றைச் செய்யும் அமைப்பையும் காண

விரும்புகிறேன்". என்று தன் தாயிடம் கூறி விடைபெற்றுக் கொண்டான். தஞ்சைக்குப் பயணமானான். காஞ்சியிலிருந்து புறப்பட்ட பத்துதினங்களில் தஞ்சையை வந்தடைந்தான். கோபுரத்தின் அமைப்பைக் கண்டு, அது அமைந்துள்ள நிலையைக் கணக்கிட்டான் சிறுவன். அங்கு சிற்பிகளின் பணி யைக் கவனமாகக் கண்டுகொண்டிருக்கும் மன்னனிடமும், மந்திரியிடமும், சிறுவன் சென்றான். சென்று, இந்த அமைப் பில் கோபுரம் கட்டப்படுமானால் பெருங்காற்றினாலும், மழையினாலும் அடிக்கடி இந்தக் கோபுரம் விழுந்து அழியும் "இதை அமைத்த திறமையற்ற சிற்பி யார்?" என்றான் இளஞ் சிற்பி. இதை செவியுற்ற மன்னனும், மந்திரியும் உடனே அச்சிறுவனை அருகில் அழைத்தனர்.

சிறுவனே! நீயார்? எங்கிருந்து வருகிறாய்? இக்கோபுரம் உறுதியாகவும், நிலைத்தும் இருக்க வேண்டுமாயின் இதை எப்படி அமைக்கலாம்? எப்படி அமைக்க வேண்டும்?" என்று கேட்டான்.

மன்னா! இக் கோபுரத்தின் உள்ளளவு சரியாகக் கணக் கிடப் படுமானால் இக்கோபுரம் உறுதியாக நிலைபெற்று நிற்கும்" என்று சிறுவன் கூறியதும் மன்னன் மகிழ்ந்தான்.

மற்ற சிற்பிகளின் மூலம் இந்தச் செய்திகளை அறிந்த சோமவர்மா உணவில் விஷம் கலக்கச் செய்தான். இதை அச் சிறுவன் அருந்த வேண்டும். சீக்கிரமாக அவனை அழைத்து வாருங்கள் என்று உத்திரவிட்டான்.

அரண்மனை வாயிலில் தனித்து நின்ற அச் சிறுவனிடம் சென்று ஏனைய சிற்பிகள் நீயார்? எங்கிருந்து இங்கு வந்தாய்? என்று திரும்பத் திரும்ப கேட்டனர்.

சிறுவன், சோமவர்மனுக்கு அருகில் அழைத்து வரப் பட்டான். தன்னருகில் கொண்டுவரப்பட்ட சிறுவனைத் தலைமைச்சிற்பி சோமவர்மா கண்டான். 'முகத்தில் கலையின் பொலிவு, ஆண்மை நிறைந்த தோற்றம், சிற்றுளி பிடிக்க

ஏற்ற கைகள், இடையில் ஆடையை கச்சமாக அணிந்திருக்கும் பாங்கு, இவற்றுடன் தோற்றமளிக்கும் சிறுவனைக் கண்டதும் பொங்கி எழுந்த சினத்தை உள்ளடக்கிக் கொண்டு,

"சிறுவனே! நீயார்! எங்கிருந்து வருகிறாய்? இங்கு உணவருந்தி முதலில் ஓய்வுகொள் என்று கூறியதைக் கேட்ட சிறுவன் இரு கரங்களைக் குவித்துக் கொண்டு "ஐயா! அரசனுடைய கருவூலத்திலிருந்து பெரும் பொருள் செலவழித்து நிர்மாணிக்கும் இந்த நெடிதுயர்ந்த கோபுரம் நீண்ட ஆண்டுகள் நிலைத்துநிற்காது" என்றான்.

இதைக் கேட்ட சோமவர்மன்" அப்படியா! இந்த கோபுரம் நீண்ட காலம் நிலைத்திருக்க நான் என்ன செய்ய வேண்டும்? உன்னைப்பார்த்தால் சிறுவனாகத் தோற்றமளிக்கிறாய். ஆனால் நீ சிற்ப நூலை நன்குணர்ந்து இருக்கிறாய் போலும்! நானோ மிகவும் உடல் தளர்ந்துள்ள மூப்பாளன். உண்மையில் எனக்கு விரல் பிரமாண அளவு கூடத் தெரியவில்லை. நீ எனக்குக் கற்றுக்கொடுப்பாயா?" என்றான். பரிகாசமாக.

இதை, செவியுற்ற சிறுவன், ஐயா! உங்களுக்கும் எனக்கும் இச்செய்தி தெரியும். ஆயினும் கூறுகிறேன். கோபுரத்தின் உள்ளளவாகக் கொண்டு கணக்கிடப்படல் வேண்டும். சுற்றளவு இருபது விரலுக்கு உட்படாத அளவாகக் கொண்டு (இது பற்றியளவு முறையை சிற்ப நூலில் கண்டு கொள்க.) அமைக்கப்படுமானால் பல்லாண்டுகள் நிலைத்து நிற்கும். மன்னனின் முயற்சியும் வெற்றியடையும். அவனுக்கு உதவினால் எம்பெருமான் மகிழ்வார், எனக்கும் கைலாசவாசம் கிடைக்கும் என்பதால் நான் இதைக் கூறினேன்", என்றான் சிறுவன். இதைக் கேட்டதும் சோமவர்மா, சிற்பிகளை அழைத்தான் சிறுவனையும் சேர்த்துக் கொண்டு ஒரு குழுவாக அமர்ந்து கணக்கிட்டனர். கணக்கிட்டு இறுதி வடிவம் கொடுக்கப்பட்டு மீண்டும் பணி தொடங்கப்பட்டது. நூல்கொண்டு அளந்தனர். மஞ்சள்,

சூதமுனிவர் கூறினர் :—

சிவபக்தியிலீடுபட்ட ஒரு வயதான மூதாட்டி ஆலயத் திருப்பணியிலீடுபட்டுள்ள சிற்பிகளுக்கு உணவு, தாம்பூலம் தண்ணீர் போன்றவைகளைக் கொடுத்து பன்னிரண்டு ஆண்டு காலமாக உபசரித்து வந்தாள் ஒருநாள் அந்த மூதாட்டி "என்னிடம் ஒரு கருங்கல் இருக்கிறது. இதையும் அந்த சிவ கைங்கரியத்தில் முறைப்படி சேர்த்துவிடுங்கள்" என்று சிற்பிகளிடம் கேட்டுக்கொண்டாள்.

அந்த மூதாட்டியின் விருப்பத்தை அறிந்த சிற்பிகள் அந்தக் 'கருங்கல்லை' அழகாகச் செதுக்கி நெடிதுயர்ந்த கோபுரத்தின் 'சிகரத்தின்' மத்தியில் பொருத்தினர். அது சிவபெருமானின் தலையில் விளங்கும் சந்திரனைப் போல் விளங்கியது. பல சிற்பிகளால் பன்னிரண்டு ஆண்டு காலம் இடைவிடா கடினமான உழைப்பின் பயனாக கோபுரம் கட்டி முடிக்கப்பட்டது. மன்னனும் ஹரதத்தரும் மகிழ்ந் தனர்.

மன்னனின் விருப்பப்படி 64 வகை வியாபாரிகளை அழைத்துவர உத்திரவிட்டனர் அமைச்சர்கள். தஞ்சபுரீஸ் வரர் ஆலயத்தில் 'பாலாலயமாக' வைத்துப் பூஜிக்கப்பட்ட பெருவுடையாரின் பாணலிங்கத்தைத் தேரிலேற்றி வியா பாரிகள் வடம் பிடித்து இழுத்தனர். வாத்தியங்களின் மங்கல ஒலி, மறையோரின் மறையொலி, இசைவாணர் களின் இசையொலி, ஆகிய பல்லொலிகள் எழுப்பிய இன்ப மயமான பேரொலி எழுந்தது. நடன மாதர் நடன மாடினர். மக்கள் பூமாரி பொழிந்தனர். பெருவுடையார் எழுந்தருளுவித்த திருத்தேர் ஊர்வலமாகப்பெருங்கோயிலை அடைந்தது. மிகவுயர்ந்த, சிறந்த கர்பகிருஹத்தில் (கருவறை) சுப வேளையில் பெருவுடையாரைப் பொறுத்தி அஷ்டபந்தனம் செய்தனர்.

கோபுரங்களையும், மண்டபங்களையும் கட்டினர். விநாயகர் சந்நிதி, அம்மன் சந்நிதி, சண்டேசர் சந்நிதி,

நடராஜப் பெருமானுடைய சிற்றம்பல மண்டபம், முதலியன கட்டி முடிந்தன.

முன்னொரு சமயம் ஒருநாள் மன்னன் ஆலயநிர்மாணத்தைக் காண்பதற்காகத் தனிமையில் விஜயம் செய்தான். சிற்பிகள் தங்களது பணியிலீடுபட்டிருந்தனர். ஒவ்வொருவரும் தங்களையே மறந்து தங்களது கலையிலே மூழ்கி பணி செய்து கொண்டிருந்தனர். மன்னன் வந்ததை ஒருவரும் அறிந்திலர். பெரும் சிற்பிகளுக்கு உதவ, பால சிற்பிகள் அவர்களுக்குப் பின்னின்று கொண்டு பணிவிடை செய்வார்கள். அப்போது இளஞ்சிற்பி (சோமவர்மாவின் மகன்) தாம்பூலம் கேட்க, பின்னால் நின்று கொண்டு அவனது கலையிலீடுபட்டிருந்த மன்னனே, அவனுக்குத் தாம்பூலத்தை மடித்துக் கொடுத்தான். மணம் நிறைந்த தாம்பூலத்தைச் சுவைத்த இளஞ்சிற்பி இவ்வளவு மணமும், சுவையுமுடைய தாம்பூலம் கொடுத்தவனைக் காணத் திரும்பினான். அங்கு மன்னன் நின்று கொண்டு தாம்பூலம் கொடுத்துக்கொண்டிருப்பதைக் கண்டு, பயந்து நடுங்கி தன்னை மன்னிக்கும்படி வேண்டினான். "மன்னா! தங்களிடம் நான் செய்த அபராதத்திற்காக, நானே முருகப் பெருமானின் ஆலயத்தை நிர்மாணித்து அதில் எனது திறமையைக் காட்டவேண்டும் என்று விரும்புகிறேன். அனுமதியளியுங்கள்" என்று கேட்டுக் கொண்டான் அந்த இளஞ் சிற்பக் கலைஞன். மன்னனும் மகிழ்ந்து அவனுக்கு அனுமதி அளித்தான். இளஞ்சிற்பி தனது கைவண்ணத்தைக் கல்லில் காட்டி ஒரு 'கலைகற்கோயிலை'யே எழுப்பினான், அதில் கலை நுணுக்கங்கள் பல பொதிந்துள்ள, ஒரே கல்லிலான முருகப்பெருமான் வள்ளி, தேவசேனையுடன் மயிலில் ஆரோகணித்திருக்கும் திருக்கோலத்துடனும், திருவாசியுடனும் செதுக்கிவைத்தான். இதைப்போலவே சோமவர்மா ஒரே கல்லிலான நந்தியெம்பெருமானை வடித்தான். இதைக் காணவந்த மன்னனிடம்,

"மன்னர் பெரும! இப்போது ஒரு வேடிக்கை செய்கிறேன் பாருங்கள்" என்று கூறிய சோமவர்மா இப்பெரிய

நந்தியின் வால்பகுதியில் "தேரையொன்று"ள்ளது. என்று கூறி சிற்றுளியால் பலமாகத் தட்டினான். அவ்விடத்தி லிருந்து தேரையொன்று சந்தணப் பூச்சுடனும், (நிறத் துடன்) நீருடனும் வெளிப்பட்டு நடராஜரின் சந்நிதிக்கு மேற்கே தத்திக்கொண்டு விழுந்தது. அவ்விடத்திலுள்ள கிணற்றுக்கு அன்று முதல் 'பேக தீர்த்தம்' என்ற பெயர் உண்டாயிற்று. (பேக: = தவளை, தேரை) தெற்குத்திசை யில் மற்றொரு நந்தியையும், கோபுரத்தின் சிகரத்தில் எட்டு நந்திகளையும் உருவாக்கி வைத்தனர். அகோரமூர்த்தியை யும், மற்றும் இருபத்தைந்து மூர்த்திகளையும் ஆலயத்தில் பிரதிஷ்டை செய்தனர். பெருவுடையாருக்கு ஏற்ப சோமாஸ்கந்தப் பெருமானை (உத்சவ மூர்த்தியை) உருவாக் கினர். கோவிலின் பிரகாரமதிற்சுவற்றில் அழகு வாய்ந்த நந்திகளை அமைத்தனர். ஆலயம் பூர்த்தியானது.

சிற்பச் சக்ரவர்த்தி சோமவர்மன் மன்னனுக்கு ஒவ்வொன்றையும் காட்டி அவற்றின் நுட்பங்களை விளக் கினான். சிற்ப நுணுக்கங்களைக் கண்டு "கைலையே பூவுல கிற்கு வந்து விட்டதோ" என்று எண்ணி அகமகிழ்ந்தான் மன்னன்.

மன்னன் கரிகாலன் சிற்பி ஸோமவர்மனுக்கு கனகா பிஷேகம் செய்து யானையில் அவனையும், அவனது மகனையும் இருக்கச்செய்து ராஜவீதிகளில் வீதிவலம் வரச்செய்தான். தஞ்சை நகரம் விழாக்கோலம் பூண்டது. பல்வகை வாத்யங்கள் முழங்கின. அனைத்துச் சிற்பிகளுக்கும் கடகம், கேயூரம், மாலை, பட்டாடைகள் முதலியவைகளைக் கொடுத்து மரியாதை செய்தான். பெரும் பொருள் கொடுத்தான். அனைவருக்கும் சிறப்பான விருந்து படைத் தான். "சோழபுரம்" என்ற பெயரில் ஒரு பெருங் கிராமத்தை கலையின் பரிசாக இவர்களுக்கு அளித்தான். சிற்பிகள் மகிழ்ந்தனர். மன்னன் கொடுத்த பொருளைக் கொண்டு காவிரியின் வடகரையில் கைலாசநாதருக்கு இவர்கள் ஒரு பெருங் கோயிலை எடுத்தனர்.

தனது குருவான ஹரதத்தரை முன்னிட்டுக் கொண்டு தேசத்தின் பல இடங்களிலிருந்து சைவாகமத்தில் கரை கண்ட சிவாச்சாரியார்கள் அழைக்கப்பட்டனர். அவர்கள் கும்பாபிஷேகத்திற்குத் தேவையான அனைத்து ஏற்பாடு களையும் செய்தனர். 'மகுடாகம' முறைப்படி லக்ஷக்கணக் கான வேதியர்கள் யாகசாலையில் உருவான 'யாகவேதிகை' யில் யாகம் செய்தனர். திருவையாற்றிலிருந்து வரவழைக் கப்பெற்ற சிவாச்சாரியார்கள் பெருவுடையாரின் பெருங் கோயிலுக்குக் கும்பாபிஷேகம் (குடமுழுக்கு) செய்து முறைப்படி எம்பெருமானை பூஜித்தனர்.

---

## பதினொன்றும் அத்தியாயம்

**சூத முனிவர் கூறுகிறார் :**

பெருவுடையாருக்கும். விநாயகப் பெருமான், முருகப் பெருமான், சோமாஸ் கந்தர், சண்டேசர் ஆகியோரின் ஆலய கும்பங்களுக்கு நல்ல சுபமான முகூர்த்தத்தில் குடமுழுக்கு நடைபெற்றது. இந்த குடமுழுக்கிற்குப் பிறகு பெருவுடை யாருக்கு பிர்மாண்டமான அபிஷேகம் நடைபெற்றது. அதில் கீழே காணும் கணக்கில் அபிஷேகப் பொருட்கள் பயன் படுத்தப் பெற்றன.

தங்கக் குடங்கள்—119, சங்குகள்—1000, செப்புக் குடங்களில் புண்ணிய நதிகளின் நீரிட்டு அதில் நவரத்தினங் களிட்டு பஞ்சபல்லவத்தால் (பில்வம், மா, அரசு, ஆல், மகிழம், ஆகியவற்றின் இலைக்கொத்து) அர்ச்சனை செய்த குடங்கள்—1000, பிர்ம கூர்ச்சத்துடன் பஞ்சகவ்ய அபிஷேகம்—100குடங்கள், பசும்பால்-1லட்சம் குடங்கள், நெய்—100 குடங்கள், சர்க்கரை—5 மலைகள், இளநீர்—2 லட்சம் காய்கள், வாழைப்பழம்—5 லட்சம், மாம்பழங் கள்—1 லட்சம், பலாப்பழம்—1 லட்சம், எலுமிச்சைப் பழம்-10 லட்சம், கரும்புச்சாறு-1000 குடங்கள், நறுமணப்

பொடி கலந்த நீர்—1000 குடங்கள், சுத்தமான நீர்—5 லட்சம் குடங்கள். அந்தணர்கள் ஸ்ரீருத்ரத்தை கோஷிக்க அபிஷேகம் நடைபெற்றது. இதைத் தொடர்ந்து ஹோமங்கள் நடந்தன. பெருவுடையாருக்கு வஸ்திரங்களையும், ஆபரணங்களையும் அணிவித்தனர். இதைப்போலவே பெரிய நாயகி, கணபதி, முருகன், நடேசர் முதலிய மூர்த்திகளுக்கும் அலங்காரங்கள் செய்தனர். லட்சதீபங்கள் (நெய் விளக்குகள்) ஏற்றப் பெற்றன. பக்ஷணங்களும், சித்ரான்னங்களும் மலைகளைப் போல் குவிக்கப்பட்டு நிவேதனம் செய்யப்பெற்றன. துந்துபி போன்ற பல விதமான வாத்தியங்கள் முழங்கின. குடை, சாமரம், கொடி, முதலிய விருதுகள் அலங்காரமாக வைத்தனர். ஆடல் மகளிர் நடனமாடினர். வீணை, குழல், மிருதங்கம், ஜலரின் ஒலிசுநாதமாக எழுந்தன. ஆகம முறைப்படி மஹாபிஷேகம் செய்யப் பட்டது. அறுசுவை விருந்தை ஒரு கோடி அந்தணர்களுக்கு வழங்கினான் மன்னன். இவர்களுக்கு ஆடைகள், உதகபாத்திரங்கள், தக்ஷிணை முதலியவற்றை வழங்கினான். அர்ச்சகர்கள் ஸ்ரீருத்ரஜபம் செய்தவர்கள், உதவியாளர்கள் ஆகியோர்களுக்கு வஸ்திரங்கள், ஆபரணங்கள், வாசனை திரவியங்கள் பசு. பூமி, தானியம் முதலியவைகளை வழங்கினான். இதனால் அவர்கள் அனைவரும் மகிழ்ந்தனர். கும்பாபிஷேகத்தை யொட்டி மண்டலாபிஷேகமும் சிறப்பாகக் கொண்டாடினான் மன்னன், முக்காலங்களிலும் லட்சார்ச்சனைகளை செய்யச் செய்தான், இறைவனின் பூஜைக் கட்டளைக்காக சூலமங்கலத்திற்குக் கிழக்கே 10 கிராமங்களை வழங்கினான். இதனை செப்புப் பட்டயத்தில் எழுதிக் கொடுத்தான். நடர்களையும், நடனமாதுக்களையும் நடனத்திற்காக ஏற்பாடு செய்தான். பஞ்சாமிர்த அபிஷேகத்திற்கு 1000 பசுக்களை அளித்தான். அமாவாசை, பௌர்ணமி, ப்ரதோஷம் ஆகிய திதிகளில் இருமுறை பூஜை செய்ய தனியாக கட்டளை ஏற்பாடு செய்தான்.

## பதினேழாவது அத்தியாயம்

**சூத முனிவர் கூறுகிறார் :**

சித்திரைப் பெருவிழாவுக்காக கட்டளைகளை ஏற்பாடு செய்தான். கொடியேற்றந் தொடங்கி பதினெட்டு நாட்கள் விழா நடத்த ஏற்பாடு செய்தான். ஏகாதசியன்று ரதோத்சவமும், துவாதசியன்று சிவகங்கையில் தீர்த்தம் கொடுக்கவும் ஏற்பாடு செய்தான். விநாயகர் திருவிழா மூன்று நாட்கள், முருகனுக்கு விழா மூன்று நாட்கள், பின் கல்யாணசுந்தரர் இடபாரூடராய் நான்கு விதிகளில் ஊர்வலம் வரச்செய்தான். யானை வாகனம், பூதவாகனம் முதலிய வாகனங்களைச் செய்தான். கொடி, மணியுடன் எட்டு சக்கரங்களுடைய உயரமான தேர் செய்துவைத்தான். இதில் பிருகதீஸ்வரர் நகரைப் பவனி வந்தார். பிருகன் நாயகி சமேதராக மற்றொரு ரதத்தில் பவனி வந்து துவாதசியன்று சிவகங்கையில் தீர்த்தம் கொடுத்தருளினார். அனைத்து மக்களுடன் மன்னனும், ஹரதத்தரும் நீரில் மூழ்கி எழுந்தனர். குஷ்டரோகம் நீங்கி சந்திரனைப் போல் ஒளியுடன் திகழ்ந்தான் மன்னன். மனைவியுடன் மூழ்கி நீராடிய மன்னன் பசு, தனம், தானியம் முதலியவைகளை அந்தணர்களுக்கு மிகுந்த பக்தியுடன் தானம் செய்தான். மன்னனுக்கு நேரில் கங்காதேவி தோன்றி நீரிலிருந்து விஸ்வநாதர் என்ற பெயரையுடைய லிங்கத்தை எடுத்துக் கொடுத்தாள். மின்னற்கொடி போன்று சர்வாபரண பூஷிதையாகத் தோன்றிய கங்காதேவி மக்கள் கேட்குமாறு கூறினாள்.

"மன்னா! சிவகங்கை தீர்த்தத்தில் நான் எனது ஒரு அம்சத்துடன் என்றும் இருப்பேன். இதில் நீராடி தியானிப்பவர் அனைத்துப் பாவங்களிலிருந்தும் விடுதலை பெற்று பிருகதீஸ்வரப் பெருமானைக் காண்பர். இறுதியில் கயிலையை அடைவர். சந்திர சூரிய கிரஹணங்களிலும், பௌர்ணமி அமாவாசை, பிரதோஷம், திங்கட்கிழமை மற்றும் புண்ணிய தினங்களில் நீராடினால் கங்கையில் நீராடிய பயனைப் பெறுவர். பிருகதீஸ்வரரை தரிசிப்பவர்

காசி விசுவநாதரை தரிசித்த பயனைப் பெறுவர் என்றும், மன்னா! முன்பு கங்கையில் இருந்த இந்த லிங்கத்தை இத் தடாகத்தின் அக்னி மூலையில் (தென்மேற்கு) பிரதிஷ்டை செய்வாயாக. இதனால் இந்தப் பொய்கை 'சிவ-கங்கா' என்று அழைக்கப் பெறும்'' என்றும் கூறி மறைந்தாள். மன்னனும் கங்கை கூறிய வண்ணம் விஸ்வநாத லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தான். அந்த லிங்கம் இன்றும் சிவ கங்கையில் காணப்படுகிறது.

கங்கையைக் கண்ட மன்னன் ஆச்சரியமடைந்தான், தனது கொடிய குஷ்டநோய் மறைந்ததைக் கண்டு மகிழ்ந்து சாஷ்டாங்கமாக கீழேவிழுந்து நமஸ்கரித்து தோத்தரித்தான். தனது குரு ஹரதத்தரையும், சிவாச்சாரியார்களையும் வணங்கினான். பிரகதீஸ்வரப் பெருமானை பூஜிக்க திருவையாற்றிலிருந்து ஆதிசைவகுலத் தோன்றல்களை வரவழைத்து அவர்கள் குடியிருக்க வீடுகளையும் நல்கினான்.

மன்னன், துயிலும் போழ்து எம்பெருமான் இடபாரூடராய்த் தேவியுடன் காட்சி நல்கினார். 'மன்னா! உன்னால் அளிக்கப்பெற்ற உணவை உண்டு, கிழவியின் நிழலில் உறைந்து வருகிறேன்' என்று கூறி மறைந்தருளினார். தனது குரு ஹரதத்தரிடம் தனது கனவைக் கூறினான் மன்னன்.

சிற்பிகள் அனைவரையும் வரவழைத்தான். சிற்பத் தலைவன் சோமவர்மன் அழைக்கப்பெற்றான். அவனிடம் மன்னன் சோமவர்மனே! நீ எனது பணத்தில் கோவில் கட்டினாயா? அல்லது பிறர் பொருளைக் கொண்டுகட்டினாயா? சிற்பிகளை அழைத்து அவர்களிடம் விசாரித்து எனக்கு உடன் செய்தியை அறிவிப்பாயாக என்றான். சிற்பி சோமவர்மன் அனைத்துச் சிற்பிகளிடமும் தனித்தனியே விசாரித்தான். சூழ்ந்திருந்த சிற்பிகள் அஞ்சினர். 'உணவளித்த ஒரு மூதாட்டியின் விருப்பத்திற்கு இணங்க, அவளால் கொடுக்கப் பெற்ற கல்லை கோபுரத்தின் சிகரத்தில் பொருத்தியிருக்கிறோம்'' என்று சிற்பிகள் கூறினர். சோமவர்மன் இதனை மன்னனிடம் கூறி மன்னிப்பையும்

## பதினேழாவது அத்தியாயம்

**சூத முனிவர் கூறுகிறார் :**

சித்திரைப் பெருவிழாவுக்காக கட்டளைகளை ஏற்பாடு செய்தான். கொடியேற்றந் தொடங்கி பதினெட்டு நாட்கள் விழா நடத்த ஏற்பாடு செய்தான். ஏகாதசியன்று ரதோத்சவமும், துவாதசியன்று சிவகங்கையில் தீர்த்தம் கொடுக்கவும் ஏற்பாடு செய்தான். விநாயகர் திருவிழா மூன்று நாட்கள், முருகனுக்கு விழா மூன்று நாட்கள், பின் கல்யாணசுந்தரர் இடபாரூடராய் நான்கு வீதிகளில் ஊர்வலம் வரச்செய்தான். யானை வாகனம், பூதவாகனம் முதலிய வாகனங்களைச் செய்தான். கொடி, மணியுடன் எட்டு சக்கரங்களுடைய உயரமான தேர் செய்துவைத்தான். இதில் பிருகதீஸ்வரர் நகரைப் பவனி வந்தார். பிருகன் நாயகி சமேதராக மற்றொரு ரதத்தில் பவனி வந்து துவாதசியன்று சிவகங்கையில் தீர்த்தம் கொடுத்தருளினார். அனைத்து மக்களுடன் மன்னனும், ஹரதத்தரும் நீரில் மூழ்கி எழுந்தனர். குஷ்டரோகம் நீங்கி சந்திரனைப் போல் ஒளியுடன் திகழ்ந்தான் மன்னன். மனைவியுடன் மூழ்கி நீராடிய மன்னன் பசு, தனம், தானியம் முதலியவைகளை அந்தணர்களுக்கு மிகுந்த பக்தியுடன் தானம் செய்தான். மன்னனுக்கு நேரில் கங்காதேவி தோன்றி நீரிலிருந்து விஸ்வநாதர் என்ற பெயரையுடைய லிங்கத்தை எடுத்துக் கொடுத்தாள். மின்னற்கொடி போன்று சர்வாபரண பூஷிதையாகத் தோன்றிய கங்காதேவி மக்கள் கேட்குமாறு கூறினாள்.

"மன்னா! சிவகங்கை தீர்த்தத்தில் நான் எனது ஒரு அம்சத்துடன் என்றும் இருப்பேன். இதில் நீராடி தியானிப்பவர் அனைத்துப் பாவங்களிலிருந்தும் விடுதலை பெற்று பிருகதீஸ்வரப் பெருமானைக் காண்பர். இறுதியில் கயிலையை அடைவர். சந்திர சூரிய கிரஹணங்களிலும், பௌர்ணமி அமாவாசை, பிரதோஷம், திங்கட்கிழமை மற்றும் புண்ணிய தினங்களில் நீராடினால் கங்கையில் நீராடிய பயனைப் பெறுவர். பிருகதீஸ்வரரை தரிசிப்பவர்

காசி விசுவநாதரை தரிசித்த பயனைப் பெறுவர் என்றும், மன்னு! முன்பு கங்கையில் இருந்த இந்த லிங்கத்தை இத் தடாகத்தின் அக்னி மூலையில் (தென்மேற்கு) பிரதிஷ்டை செய்வாயாக. இதனுல் இந்தப் பொய்கை 'சிவ-கங்கா' என்று அழைக்கப் பெறும்" என்றும் கூறி மறைந்தாள். மன்னனும் கங்கை கூறிய வண்ணம் விஸ்வநாத லிங்கத் தைப் பிரதிஷ்டை செய்தான். அந்த லிங்கம் இன்றும் சிவ கங்கையில் காணப்படுகிறது.

கங்கையைக் கண்ட மன்னன் ஆச்சரியமடைந்தான், தனது கொடிய குஷ்டநோய் மறைந்ததைக் கண்டு மகிழ்ந்து சாஷ்டாங்கமாக கீழேவிழுந்து நமஸ்கரித்து தோத்தரித் தான். தனது குரு ஹரதத்தரையும், சிவாச்சாரியார்களை யும் வணங்கினுன். பிரகதீஸ்வரப் பெருமானை பூஜிக்க திருவையாற்றிலிருந்து ஆதிசைவகுலத் தோன்றல்களை வர வழைத்து அவர்கள் குடியிருக்க வீடுகளையும் நல்கினுன்.

மன்னன், துயிலும் போழ்து எம்பெருமான் இடபாருட ராய்த் தேவியுடன் காட்சி நல்கினுர். 'மன்னு! உன்னுல் அளிக்கப்பெற்ற உணவை உண்டு, கிழவியின் நிழலில் உறைந்து வருகிறேன்' என்று கூறி மறைந்தருளினுர். தனது குரு ஹரதத்தரிடம் தனது கனவைக் கூறினுன் மன்னன்.

சிற்பிகள் அனைவரையும் வரவழைத்தான். சிற்பத் தலைவன் சோமவர்மன் அழைக்கப்பெற்றுன். அவனிடம் மன்னன் சோமவர்மனே! நீ எனது பணத்தில் கோவில் கட்டினுயா? அல்லது பிறர் பொருளைக் கொண்டுகட்டி னுயா? சிற்பிகளை அழைத்து அவர்களிடம் விசாரித்து எனக்கு உடன் செய்தியை அறிவிப்பாயாக என்றுன். சிற்பி சோமவர்மன் அனைத்துச் சிற்பிகளிடமும் தனித்தனியே விசாரித்தான். சூழ்ந்திருந்த சிற்பிகள் அஞ்சினர். 'உண வளித்த ஒரு மூதாட்டியின் விருப்பத்திற்கு இணங்க, அவளால் கொடுக்கப் பெற்ற கல்லை கோபுரத்தின் சிகரத் தில் பொருத்தியிருக்கிறோம்" என்று சிற்பிகள் கூறினர். சோமவர்மன் இதனை மன்னனிடம் கூறி மன்னிப்பையும்

கோரினான். இறைவனை மகிழ்விக்க எண்ணிய மன்னன் கரிகாலன் நந்தியெம்பெருமானுக்கும், சிவபெருமானுக்கும் இடையில் உண்ணாவிரதம் இருந்து உயிரைத் துறப்பது என்று தீர்மானம் செய்து, தனது மனைவியுடன் தரையில் படுத்து உண்ணா நோன்பு நோற்றான். மூன்று தினங்கள் கழிந்தன. கரிகாலனின் கனவில் தோன்றிய பெருவுடையார் அன்பனே! வருந்தற்க. மூதாட்டி விரும்பும் அளவு அவளுக்குப் பொருள் கொடுப்பாயாக. அவள் மனம் மகிழ்ந்தால் உனது தர்மம் என்றும் நிலைத்து நிற்கும். வானில் சந்திர சூரியர் உள்ளவரை, மண்ணில் மழையுள்ளவரை, உனது முன்னோர்களுடனும், உனது சந்ததியினருடனும் எனது சந்நிதியில் ஸாரூப்யத்துடன் விளங்குவாயாக. முருகன், கணபதி, நந்தி, ஆகியோரைப் போல் நீயும் திகழ்வாய்'' என்று கூறி மறைந்தார்.

அதிகாலையில் கனவு கண்ட மன்னன் தனது குரு ஹரதத்தரிடம் தான்கண்ட கனவைப் பற்றிக் கூறினான். வயதான அந்த மூதாட்டி அழைத்துவரப் பட்டாள். அவளுக்குக் கனகாபிஷேகம் செய்தான் மன்னன். அம்மையே! உனக்கு ஒருலட்சம் பொற்காசுகளை தருகிறேன் பெற்றுக் கொண்டு மகிழ்ச்சியடைவாயாக, உனது மகிழ்வே எனது மகிழ்வு என்றான்.

இதைக் கேட்ட அந்த மூதாட்டி மன்னா! இன்றோ, நாளையோ எனது மரணத்தை எதிர்ப்பார்த்துக் கொண்டு இருக்கிறேன். இவ்வளவு செல்வத்தால் மட்டும் என்ன பயன்? எனது பெயரால் இந்தப் பொருளைக் கொண்டு கும்பகோணத்துக்கு நிருதிதிக்கில் ஐராவதேஸ்வரருக்கு ஒரு ஆலயம் எழுப்புவாயாக, அப்போது தான் நான் மகிழ்ச்சியடைவேன்'' என்றாள்.

அப்படியே செய்கிறேன் என்று வாக்களித்தான் மன்னன். சிற்பிகளிடம் மூதாட்டி விரும்பியபடி ஆலயம் எடுத்தான். மூதாட்டி மகிழ்ந்தாள். உரிய காலத்தில் சிவப்பேற்றைப் பெற்றாள்.

சூத முனிவர் கூறுகிறார் :

கரிகாலன் 90 ஆண்டுகள் ஆட்சிசெய்தான். இவன் தனது மகன் பீமசோழனுக்கு முடி சூட்டி தனது மனைவியுடன் கைலேயை அடைந்தான். கைலேயில் சிவகணமாக; சிவஸ்வருபமாக ஆனான். நதிகளும், பொய்கைகளும், கடலும், மலேயும் எந்நாள் வரையுள்ளதோ அந்த நாள்வரை இவனது புகழ் நிலேத்து நிற்கும். இவனது புகழை என்றும் பரப்பும் வண்ணம் இவன் எழுப்பிய கற்றளியில் கல்வெட்டாக வெட்டியுள்ளான். கரிகாலன் சோழர் குலத்து மன்னர்களில் மிகப் புகழ்வாய்ந்த சிவத்தொண்டன். இவன் வரலாற்றைக் கேட்டவர்களின் பாவம் தொலேந்து சிவகணப் பேற்றை அடைந்து வெள்ளி மலேயில் வாழ்வர்.

---

## பதினெட்டாவது அத்தியாயம்

கரிகாலனின் மகன் பீமசோழன் சிறப்பாக ஆட்சி செய்தான். கேரள ராஜகுமாரி(வித்யுல்லதா) மின்னற் கொடியைத் திருமணம் செய்து கொண்டு சிறந்து வாழ்ந்தான். அவள் ரதியைப் போல அழகியாக இருந்தாள். அனேத்துக் குணங்களும் நிறம்பப் பெற்றிருந்தாள். மன்னன் பீம சோழன் தனது பெயருக்கு ஏற்ப வல்லமை பொருந்தியவனுக இருந்தான். அவன் ஆட்சியில் திருட்டு கிடையாது. கொடிய விலங்குகளால் துன்பம் கிடையாது. காலா காலங்களில் மழை பொழிந்தது. சாலேகளின் இருமருங்கிலும் நிழல்தரும், பழமரங்களே வளரச் செய்தான். அன்னச் சத்திறங்களேத் தோற்றுவித்து அதில் விரும்பிய அளவு உணவு கொடுக்க ஏற்பாடுகளேச் செய்தான். சாலேகளில் பல தங்கும் விடுதிகளேக் கட்டுவித்தான். பலமருத்துவச் சாலேகளேத் தோற்றுவித்தான். வண்டிகளில் உணவையேற்றி பற்பல கிராமங்களுக்குச் சென்று வழங்கினுன். தங்களது மதத்திற்குரிய அணிகளே (விபூதி, திருமண் முதலிய) நெற்றியில் அணிந்து கொள்ளத் தூண்டினுன். இவன் பப்

பொழுதும் நெற்றியில் விபூதி துலங்க, கழுத்தில் ருத்ராக்ஷ மிலங்கக் காணப் பெற்றான்.

திருவண்ணாமலையில் கோபுரங்களையும் மண்டபங் களையும் கட்டுவித்தான். காவிரியின் வடகரையில் பீமேஸ் வராலயத்தைக் கட்டுவித்தான். தோணிபுரத்திற்கு நான்கு புறமும் கோபுரங்களைக் கட்டுவித்தான். ஒவ்வொரு சிவால யங்களிலும் விளக்கெரிக்கவும், நறுமண மலர்களுக்காகவும், பல நந்தவனங்களையும் கோவிலுக்குத் தேவையான தென்னை, கரும்பு, வாழை முதலிய தோப்புகளை உண்டாக்க நிலமும், கார்த்திகை மாதங்களில் சிவ-விஷ்ணுஸ்தலங்களில் விளக்குகள் எரிக்க தனிப்பட்ட நிலங்களையும், பற்பல சிவா லயங்களில் நீராழிகளையும், அதில் நீராழி மண்டபங்களையும் ஏற்பாடு செய்தான். பெரும் விழாக்களுக்குத் தேவையான பல ஏற்பாடுகளைச் செய்தான். இவன் மனைவி 'வித்யுல்லதா' சங்கர நாராயணரிடம் பக்தி பூண்டவள். தனது தந்தையின் தேசத்திலிருக்கும் சங்கர நாராயணரை தரிசிக்க வேண்டும் என்று விரும்பினாள். இதனைத் தனது கணவன் பீமசோழ னிடம் விண்ணப்பம் செய்ய எண்ணினாள். ஆனால், அவளது கனவில் சங்கர நாராயணர் தோன்றி "அம்மையே! உனது விருப்பத்தை நான் அறிவேன், நான் உனக்கு இலிங்கவடி வில் காட்சி கொடுக்கிறேன் நீ, பெருவுடையார் கோவி லுக்கு வடக்கு திசையிலும். கொங்கணேஸ்வரர் கோவிலுக்குத் தெற்கிலும், எனக்கு ஒரு ஆலயம் எடுப்பா யாக, இலிங்கவடிவில் காணப்படும் என்னை அவ்வாலயத்தில் பிரதிஷ்டை செய்து நியமத்துடன் காண்பாயாக. உனது வயிற்றில் ஒரு ஆண் குழந்தை பிறக்கும். ராஜேந்திர சோழன் என்ற பெயருடனும் புகழுடனும் விளங்குவான்". என்று கனவில் தோன்றிய சிவபெருமான் கூறி மறைந் தருளினார். காலையில் எழுந்தவுடன் லிங்கத் திருமேனியைக் கண்ட அரசியும், அரசனும் மகிழ்ந்தனர். கர்பகிருகம், கோபுரம், ஆகியவற்றுடன் ஆலயம் கட்டப்பெற்று குட முழுக்கும் சிறப்பாக நடந்தது. அரசி 'வித்யுல்லதா' தோத் தரித்து வணங்கினாள்.

இதனால் மகிழ்ந்த சிவபெருமான் எனக்கு அருகில் உள்ள கிணறு 'குப்தகங்கை' பாவங்களைப் போக்கவல்லது. எவன் விசாக நட்சத்திரத்தில் இக் கிணற்றுநீரில் ஸ்நானம் செய்கிறானோ அவனது வம்சம் விளங்கும். கார்த்திகை மாதம் சோமவாரத்தில் (திங்கட்கிழமை) இக்கிணற்றில் நீராடி பதினாறுவித உபசாரங்களுடன் என்னை நீங்கள் இருவரும் வணங்குவீர்களாக. 'ராஜேந்திர சோழன்' என்ற பெயரில் உங்கள் மகன் விளங்குவான். இறைவன், மொழிந்தவண்ணம் சிவனைப் பூஜித்தனர். மகன் பிறந்தான். ராஜேந்திரன் என்று திருநாமமிட்டனர். சர்வலட்சணங்களுடன் மன்மதனைப் போன்று அழகாக இருந்தான். அனைத்துக் கலைகளையும் கற்றான். வாலிபப் பருவம் வந்தது இவனுக்கு 'கமலினி' என்ற பெயருடைய குலசேகர பாண்டியனின் மகளைத் திருமணம் செய்துவைத்தான். இருவரும் தங்களது பெற்றோர்களான பீமசோழனுக்கும், வித்யுல்லேகாவிற்கும் பணிவிடை செய்தனர். 77 ஆண்டுகள் உயிர் வாழ்ந்து பின் கைலையை அடைந்தனர். அவர்களுக்குப் பிறகு ராஜேந்திரசோழன் அரசாண்டான்.



## பத்தொன்பதாவது அத்தியாயம்

பீம சோழனுக்குப் பிறகு அவன் மகன் ராஜேந்திர சோழன் சிறப்பாக அரசாண்டான். சேரனையும், பாண்டியனையும் வென்றான். அவர்கள் செலுத்தும் கப்பங்களைக் கொண்டு திருமுல்லைவாயில் திருப்பூந்துருத்தி, திருவெண்ணியூர், திருநெல்லிக்கா, சிற்றேமம், ருஷிகானனம் ஆகிய ஊர்களில் சிவாலயங்களை எடுத்தான். இதைப்போன்று எண்பது (80) ஆலயங்களை கட்டி முடித்தான். இவ்வாலயங்களில் பெரும் விழாக்களை எடுத்தான். ஒவ்வொரு ஊரிலும் அக்ரஹாரங்களை உண்டாக்கினான்.

முருகனுடைய ஆலயங்களைக் குன்றுகளில் கட்டுவித்தான். விஷ்ணு, கணபதி, துர்கை, சாஸ்தா முதலிய ஆலயங்களும் தோன்றின.

பிரதாபருத்ரன் என்ற மன்னனைப் போரில் வென்றான், அவன் போரில் கண்களை இழக்குமாறு செய்தான். அவனால் கப்பமாகக் கொடுக்கப்பட்ட பொருளைக் கொண்டு மேலும் பல ஆலயங்கள் கட்டப்பட்டன. இவனால் இரண்டு நதிகள் உருவாயின (கால்வாய் வெட்டப்பட்டன) அவனுக்கு ஒரு பிள்ளை பிறந்தான். அவன் சூரியனை நிகர்த்த ஒளி பொருந்தியவனாக இருந்தமையால் அவனுக்கு 'வீர மார்த்தாண்டன்' என்ற பெயரைச் சூட்டினர். இவனது வாலிபப் பருவத்தில் அரசு முடிசூட்டிவிட்டு தனது 78-வது வயதில் தனது துணைவியுடன் சிவலோக ப்ராப்தி அடைந்தான்.

---

## இருபதாவது அத்தியாயம்

வீர மார்த்தாண்டன் தனது முன்னோர்களைப் போல நாட்டை ஆண்டான். இவனது ஆட்சியின்போது வேத பாடசாலைகளும், சாஸ்திர பாடசாலைகளும் தோன்றின. சாலைகளின் இருமருங்கிலும் நல்ல பழம் தரும், நிழல் தரும் மரங்களைப் பயிராக்கினான். வழிப்போக்கர்களுக்காக இளைப்பார மண்டபங்களை உண்டாக்கினான். தீக்ஷிதர்கள் வேள்விகளை நிறைவேற்றினர். யாகத்தில் கொடுக்கப் பெற்ற அவியால் தேவர்கள் வயிறு புடைத்தனர். அக்னி ஹோத்திர வேள்விச் சாலையிலிருந்து கிளம்பும் புகை மண்டலம் சுவர்கத்திற்குச் செல்லும் படிபோல் தோன்றியது. இவன் காலத்தில் சுமார் அறுபது (60) ஆலயங்களைக் கட்டினான். மேலும் இவனுடைய முன்னோர் கட்டிய ஆலயங்களைப் பழுது பார்த்து அஷ்ட பந்தன குடமுழுக்கும் செய்தான்.

இவனால் கட்டப்பட்ட ஆலயங்களில் சில: திருநெய்தானம், திருப்பூந்துருத்தி, திருக்கண்டியூர் முதலிய சப்த ஸ்தான சிவஸ்தலங்களையும், கும்பகோணத்தில் சாரங்கபாணி, சக்ரபாணி, சாரக்ஷேத்ரம் முதலிய வைஷ்ணவ ஆலயங்களைக் கட்டுவித்தான். சோமேஸ்வரம், நாகேஸ்வரம், கௌதமேஸ்வரம், விஸ்வநாதர் ஆலயம் ஆகிய சிவாலயங்

களைக் கட்டுவித்தான். மகாமகக் குளத்தைச் செப்பனிட்டான். சேர மன்னனின் மகள் மாணிக்கவல்லியுடன் திறமையாக ஆண்டுவரும் நாளில் ஒரு நாள் இவனது அரசவையிலிருந்த தேவசர்மா என்னும் ராஜ புரோஹிதர் மன்னன் விரும்பியபடி கொங்கணேஸ்வரரின் வரலாற்றைக் கூறலுற்றார்.

தத்தாத்ரேயரின் சீடர்களுள் ஒருவர் கொங்கணர். இவர் சிவபெருமானைக் குறித்து இமயமலையின் ஒரு சிகரத்தில் பஞ்சாக்னி மத்தியிலிருந்து கொண்டு நூறு ஆண்டுகள் தவமியற்றினார். இவனது தவத்திற்கு மகிழ்ந்து சிவபெருமான் தோன்றினார்.

அன்பனே! உனது தவத்தால் யாம் மகிழ்ந்தோம். நீ உனது காரியசித்தி பெற வேண்டுமாயின் 'சமீவனம்' என்னும் புனித இடத்திற்குச் செல். இச் சமீவனம் என்பது திருவையாற்றுக்குத் தெற்கே காவிரியிலிருந்து இரண்டு குரோச தூரத்தில் (4 மைல்) விண்ணாறு என்னும் நதி ஓடுகிறது. இந்த நதிக்குத் தெற்கே மணிமுத்தா நதி ஒன்று ஓடுகிறது. இதன் கரையில் 'சுதாபுஷ்கரிணி' என்ற பொய்கைக் கரையில் ஆனந்தவல்லியுடனுறை தஞ்சபுரீஸ்வரர் ஆலயம் உள்ளது. அவரை வணங்கி அங்கிருந்து ஈசான திக்கில் (தென்மேற்கில்) வசிஷ்டேஸ்வரர் வசிஷ்ட தீர்த்தக் கரையில் எழுந்தருளியிருக்கின்றார். அதற்கும் தெற்கே நான், கரதலேஸ்வரர் என்ற பெயரில் லிங்க வடிவில் எழுந்தருளியுள்ளேன். அங்கு தேவ தீர்த்தம் என்ற பெயரில் ஒரு தீர்த்தம் உள்ளது. இங்கு பராசர முனிவர் தவம் செய்து சித்தி பெற்றார். கரிகாலன் என்னும் சோழ மன்னனால் கட்டப் பெற்ற பெருங்கோயில் பிருகன்நாயகி ஸமேத பிருகதீஸ்வரரை பிரதிஷ்டை செய்து வழிபட்டான். அக்கோயிலுக்கு வடக்கே 'கொங்கணேஸ்வரர்' என்ற பெயரில் ஒரு இலிங்கத்தை ஸ்தாபித்து வழிபடுவாயாக. இங்ஙனம் செய்தால் நீ ஸித்தி பெறுவாய் என்று சிவபெருமான் கூறியருளினார்". இதைக் கேட்ட கொங்கண முனிவர் மகிழ்ந்து இமயமலையிலிருந்து

தென்னாட்டிற்கு வரும் வழியில் கேதாரம், காஞ்சி, முதலிய புனித ஸ்தலங்களையும், புனித தீர்த்தங்களில் நன்னீராடியும், காவிரியை வந்தடைந்தார். சமீவனத்தை அடைந்து கொங்கணேஸ்வரரை உரிய இடத்தில் ஸ்தாபித்து வழிபட்டு ஸ்ரீ ருத்ர பஞ்சாக்ஷர மந்திர ஜபத்தால் தவமியற்றினார். (12) பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பின் இறைவன் விருஷபாருடராக ஞானம்பாளுடன் கொங்கண சித்தருக்குக் காட்சி நல்கினார். கங்கையும், சந்திரனையும், தலையில் சூடியும், நீலகண்டம் விளங்க, முக்கண்ணுடன் காட்சி நல்கினான். கொங்கண சித்தர் எம்பெருமான் திருவடியில் வீழ்ந்து வணங்கித் துதித்தார. இவரது துதியைக் கேட்டுச் சிவபெருமான் கூறலானார். "கொங்கண முனிவனே ! உன்னால் ஸ்தாபிக்கப் பெற்ற இந்த லிங்கத்தில் நான் எப்பொழுதும் வாஸம் செய்வேன். எனக்கு முன்னுள்ள இந்த சித்த தீர்த்தத்தில் மூழ்கி (அய்யன் குளம்) என்னை எவனொருவன் வணங்குவனோ அவன் எப்பொழுதும் என்னருகில் வசிப்பவனாவான். இங்கு இறப்பவனுக்கு முறைப்படி கைலாச பதவியை அளிப்பேன். புண்ணிய காலங்களிலும், இரண்டு பருவ காலங்களில் உள்ள பிரதோஷங்களிலும், சோமவாரங்களிலும், சிவராத்திரி முதலிய புனித தினங்களிலும் என்னை எவன் பூஜிக்கின்றானோ அவனுக்கு யம தூதர்களால் எந்த பயமும் இல்லாமற் செய்கிறேன். உனது தவம் சித்தியாயிற்று. நீ கைலாயத்தை அடைவாயாக" என்று கூறி முனிவருக்கு வரமளித்து அந்த லிங்கத்தில் மறைந்தருளினார். முனிவரும் சூரியனை நிகர்த்த வான ரதத்தின் மூலம் கைலையை அடைந்தார்.

---

## இருபத்தொன்றாவது அத்தியாயம்

**சூதர் கூறுகிறார் :**

சிவனுடைய கதையில் விருப்பமுடையவரே ! கொங்கணேசருடைய மற்றொரு லீலையைக் கூறுகிறேன் கேட்பீர்களாக என்று சூத முனிவர் கூறலானார்.

தேவசர்மா வீரமார்த்தாண்டனிடம் தொடர்ந்து கூற லானார். தஞ்சையில் வாழ்ந்த வணிகர் ஒருவருடைய மகள் கொங்கணேஸ்வரரிடம் மிகுந்த பக்தி பூண்டவள். திரு மணப் பருவத்தை அடைந்தாள். அவளுக்கு அவளின் தந்தை, திருமணத்திற்காக ஏற்பாடுகளைச் செய்தான். இதனை அறிந்த அந்தப் பெண் "பிறந்து பிறந்து இறக்கும் மனிதர்களை நான் திருமணம் செய்துகொள்ள விரும்ப வில்லை. காமனை அழித்த அந்த (சிவபெருமானையே) கொங்கணேசரையே திருமணம் செய்துகொள்ள விரும்பு கிறேன்". என்று கூறி திருமண ஏற்பாடுகளைத் தகர்த்து வந்தாள். இறைவனையே திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்று தியானித்தும் வந்தாள். ஒருநாள் இரவு மக்கள் அனைவரும் தூங்கிக் கொண்டு இருந்தனர். இந்த நிலையில் தேவர்களும், முனிவர்களும் புடைசூழ எம்பெரு மான் கொங்கணேஸ்வரர் ஆலயத்தில் எழுந்தருளினார். அந்த வியாபாரியின் பெண்ணின் கழுத்தில் மங்கல நாணைக் கட்டினார். மங்கல ஒலி எழுந்தன.

காலையில் அந்த வணிகன் தனது மகளைக் காணமல் ஆலயத்திற்கு வந்தான். அப்போது புதுத்தாலியுடன், இருக்கும் மகளைக் கண்டான். 'தான் அப்பெண்ணைத் திருமணம் செய்துகொண்டு விட்டேன்.' என்று கொங்க ணேஸ்வரர் அசிரீரியாகக் கூறினார். அருள்மிகு ஞானம் பாளுக்கு கிழக்கில இன்றும் 'அன்னபூர்ணா' என்ற பெயரில் சிலாரூபமாக அருள்பாலித்து வருகிறாள் என்று தேவசர்மா கூறிமுடித்தார்.

இந்த வரலாற்றைக் கேட்டதும் மன்னன் இறைவனது திருவிளையாடலில் ஈடுபட்டு பக்தி கொண்டான். கொங்க ணேஸ்வரரின் ஆலயம் புதுப்பிக்கப்பட்டு குடமுழுக்கும் செய்தான். அவனுடைய மகன் "கீர்த்தி சோழன்" (புகழ்ச் சோழன்) என்ற பெயரில் விளங்கினான். அவனுக்குப் பட்டம் கட்டிவிட்டு தனது 66-வது வயதில் இறைவன் திருவடியை எய்தினான்.

## இருபத்திரண்டாம் அத்தியாயம்

**சூத முனிவர் கூறுகிறார் :**

புகழ்ச்சோழன் சோழ மண்டலத்தை மிகத் திறமையாக ஆண்டான். அவனுடைய மனைவி சூர்யசேகர பாண்டியனின் மகள் கமலினி. தனது முன்னோர் எழுப்பிய ஆலயங்களை புனருத்தாரணம் செய்தான். இவன் ஒரு முருகபக்தன். நீண்ட நாட்களாக மகப்பேறின்றி வருந்தினான். சஷ்டி விருதம் இருந்தான்.

ஒருநாள் முருகன் கனவில் தோன்றினான். "அன்பனே! 'கொங்கணேசரின் ஆலயத்திற்கு நிருதி திக்கில் (வடமேற்கு) பூமியில் புதைந்து கிடக்கிறது குகபர்வதம். அதனை புனருத்தாரணம் செய்வாயாக. அங்கு சக்தி கூபம் என்ற பெயரில் ஒரு கிணறுள்ளது. அதில் நீராடி சஷ்டி விரதம் இருந்து என்னைத் துதிப்பவர்களுக்குச் சந்ததி தோன்றும். கார்த்திகை மாதம் கிருத்திகையில் என்னைத் தரிசிப்பவர்களின் விருப்பம் நிறைவேறும். நீ எனது ஆலயத்தை எழுப்புவாயாக" என்று கூறி மறைந்தான். மன்னன் மகிழ்ந்து சிற்பிகளை அழைத்து ஆலயத்தை எழுப்பினான். படிகளுடன் கிணற்றை எழுப்பினான். இறைவன் கனவில் கூறிய வண்ணம் வழிபாடு செய்து தோத்தரித்தான்.

---

## இருபத்து மூன்றும் அத்தியாயம்

**கந்தன் :**

மன்னா! உனது பக்திக்குக் கட்டுப்பட்டேன். உனது மகன் 'ஜய சோழன்' என்ற பெயரில் விளங்குவான். இந்த க்ஷேத்திரம் சக்தி க்ஷேத்ரம் ஆகையால் சக்தி, கணபதி, சாஸ்தா, விஷ்ணு முதலிய தெய்வங்களுக்கு ஆலயங்களை எடுப்பாயாக என்று கூறி மறைந்தான். எட்டு சக்திகளுக்கும் ஆலயம் எடுத்தான். ரேணுகாதேவியை நடுவில்

வைத்தும் தெற்குத் திசையில் கணபதி, சாஸ்தாவை மேற்கிலும், ந்ருசிம்மர், நீலமேகப்பெருமாள், ஆகியோருக்கு வடக்கிலும், கைலாசநாதர் வசிஷ்டேசர், வைத்யநாதர், மாரி ஆகியோருக்கு கிழக்கிலும் ஆலயங்களைப் புதுப்பித்தான். மற்றும் அங்கங்கு உள்ள சக்திகளுக்கு உரிய ஆலயங்கள் கட்டப்பட்டன. கீர்திமதி எனும் பெயரில் ஒரு நதியை வெட்டினான்.

இந்நிலையில் இவனது துணைவி கருவுற்றாள். நல்ல நாளில் குழந்தை பிறந்தது. பிறந்த குழந்தைக்கு ஜய சோழன் என்று பெயரிட்டான். வளர்பிறைபோல் மகன் வளர்ந்தான். சகல கல்வியிலும் தேர்ச்சி பெற்றான். கேரள மன்னனின் மகள் காஞ்சனமாலையை இவனுக்குத் திருமணம் செய்து முடித்தான். எழுபத்தேழு ஆண்டுகள் வாழ்ந்து இறைவன் திருவடியைப் பெற்றான். இவன் மகன், தந்தைக்குப் பிறகு சோழநாட்டை அரசாண்டான். மூதறிஞர்களின் ஆலோசனையின்படி நாட்டை ஆண்டான். கஞ்சனூர், கதலிவனம், ஸ்ரீ வாஞ்சியம் முதலிய ஆலயங்களுக்குத் திருப்பணி செய்தான். பெருவுடையார் கோவிலைப்போல் முக்கால் பங்கு இருக்குமாறு ஒரு ஆலயத்தை ஜயசோழபுரத்தில் கட்டினான்.

ஸ்ரீமுஷ்ணம், உளுந்தூர்பேட்டை, முதுகுன்றம், காலஹஸ்தி, முதலிய ஊர்களில் சிவாலயங்களை எழுப்பினான். இவனுக்கு ஒரு பிள்ளை. அவன் பெயர் கனகசோழன். இவனுக்குப் பட்டம் கட்டி விட்டுத் தனது 60வது வயதில் இறைவன் திருவடியை எய்தினான்.

---

## இருபத்து நான்காவது அத்தியாயம்

கனக சோழன் சர்பகாங்கி என்பவளைத் திருமணம் செய்து கொண்டு சிறப்பாக நாட்டை ஆண்டான். தனது நாட்டில் உள்ள அனைவரும் விபூதி ருத்ராக்ஷங்களைத் தரிக்குமாறு செய்தான். அவனது நாடு முழுவதும் வேதங்களுக்கும்

சிருர்களின் வேத வொலியும், சாஸ்திர சர்ச்சைகளின் ஒலியும், யாகத்தில் வோதப்படும், வேதவொலியும், அங்காடிகளில் பொருட்களை விலைகூறும் வியாபாரிகளின் ஒலியும், மரவர்களின் நாணொலி, வாளொலி, இசையொலி சிவாலயங்களை எழுப்பும் சிற்பிகளின் சிற்றொலியுமாக இருந்தன. காலாகாலங்களில் மழை பொழிந்து மக்கள் இன்பமாகவும், அமைதியாகவும் வாழ்ந்தனர்.

ஒரு சமயம் காவிரியின் தண்ணீர் (கிளை நதியான அரிசிலாறு) திருவலஞ்சுழியில் வெள்ளை விநாயகருக்கு எதிரில் ஒரு பொந்து வழியாக பாதாளத்துக்குப் போய் விட்டது. பாசனமில்லாத பகுதிகளில் மக்கள் நீர் பாய்ச்ச முடியாமல் பயிர் அழிந்தன. ஒற்றர்மூலம் இச் செய்தியை அறிந்த கனகசோழன் உடன் தனது படையுடன் சென்றான். காவிரிநீர்புகும் அந்த பொந்தை அடைத்தான். பயனில்லை. என்ன செய்வது என்ற மனக்கலக்கத்துடன் இறைவனையும்; வெள்ளை விநாயகரையும் வழிபட்டு வணங்கினான். அப்போது அசரீரியாக இறைவன் கூறினார் :

" மன்னா ! இந்தப் பொந்து அடைக்கப்பட்டு மீண்டும் காவிரி நீர் வழக்கமாக ஓடவேண்டுமாயின் நீயோ அல்லது பெருந்தவ முனிவனோ உங்களிருவரில் ஒருவர் அந்தப் பொந்தில் உயிருடன் இறங்க வேண்டும். பிறந்தவன் என்றாவது ஒருநாள் இறந்து படுவான். சிபி புறாவுக்கு உடலைக் கொடுத்தான். ததீசி எலும்பைக் கொடுத்தான். இல்லை என்று கூறாத கர்ணன் தனது உயிரினும் மேலான கவச குண்டலங்களை ஈந்தான். உடல் அழியும், ஆனால் புகழ் என்றும் நிலைத்து நிற்கும்" என்று கூறியது வானொலி. இதனைச் செவிமடுத்த மன்னன் இறைவனை வணங்கி பொந்தில் இறங்க நிச்சயித்தான். இந்நிலையை அறிந்த அவனது அமைச்சர்.

மன்னா ! கும்பகோணத்திற்கு வடக்கே (மேற்கே) கொட்டையூரில் 'ஹேரண்டமுனிவர்' ஒருவர் தவமியற்றுகின்றார். அவரை தரிசித்து விட்டு வரலாம்" என்று மந்திரி

கூறினான். மன்னனும் சம்மதித்து தனது மனைவியுடனும், மந்திரி, படைகளுடன் சென்றான். முனிவரின் பாதங்களில் வீழ்ந்து வணங்கினான் மன்னன் தன் துணைவியுடன். "நீண்ட ஆயுளுடன் வாழ்வாயாக. சுமங்கலத்துடன் வாழ்வாயாக. உங்களுக்குப் பிள்ளைப்பேறு கிட்டுவதாக" என்று ஆசி வழங்கினார் முனிவர், இதை செவிமடுத்த மந்திரி மகிழ்ந்தான், ஆனால் மன்னன் கலக்கமடைந்தான். "மக்களின் நன்மையின் பொருட்டு நான் பொந்தில் இறங்க வேண்டும் என்று இருக்கின்றேன். ஆனால் முனிவரோ ஆசி வழங்குகிறாரே" என்று கலங்கினான். இந்த நிலையில் அமைச்சர் முனிவரிடம் கூறினார்.

ஸ்வாமி! உங்கள் வாக்கு என்றும் பொய்க்காதது. திருவலஞ்சுழியில் காவிரி ஒரு பொந்தில் வீழ்ந்து நீர் மறைந்து விடுகிறது. இதனால் மற்ற பகுதிகளில் விளைச்சல் இல்லாமல் மக்களும், பயிரும் துன்பமடைகின்றனர். எந்த வித உபாயத்தாலும் பொந்தை அடைக்க இயலவில்லை. இறைவனுடைய அருளால் ஒரு அசரீரி உண்டாயிற்று. அரசனோ அல்லது முனிவனோ இந்தப் பொந்தில் உயிருடன் இறங்கினால் காவிரி வழக்கம்போல் ஓடி மக்களுடைய துன்பம் நீங்கும் என்று கூறியது. நாட்டையும், நாட்டு மக்களையும் காக்க வேண்டியது அரசனுடைய தர்மம். தாங்களோ தவ சிரேஷ்டர், தாங்கள் இந்த பிலத்தில் (பொந்தில்) இறங்கினால் நலம், தாங்கள் மன்னனுக்கு ஆசிகள் வழங்கிய வாக்கும் பொய்க்காது. தாங்கள் என்றுமே சிவனுடைய பக்தர். அவன் திருவடியில் வாழ்வீர்கள்." என்று வெகு நாசூக்காக மந்திரி கூறி முடித்தான். இதைச் செவிமடுத்த ஏரண்ட முனிவர் மன்னன், தேவி, மந்திரி, புடைசூழ பொந்திற்கு வந்து சேர்ந்தார்.

முனிவர் கூறினார்! மன்னா! நான் முதியவன், தவத்தினால் இளைத்துப் போனவன். இவ்வுடல் மற்றவருக்கு உபயோகப் படுவதை விரும்புகிறேன். ததீசி தேவர்களுக்காக தனது உடலைக் கொடுத்தான். அதைப் போல் நான் மக்களுக்காக

எனது உடலைத் துறக்கிறேன், எனது வாக்கும் பொய்க்காது. மன்னன் சிரஞ்ஜீவியாகவும், தேவி சுமங்கலியாகவும் சிவகைங்கர்யம் செய்து வரும் சத்புத்திரன் ஜனிப்பானாக! என்று கூறினார்.

இதைக் கேட்ட மன்னன்! நான் இருக்கும் போது தாங்கள் உயிர் துறத்தல் கூடாது மேலும் எனக்கு சிவ பக்தனைக் கொன்ற பாபமும், பிர்மஹத்தி பாபமும் தோன்றும்ஆகவே நீங்கள் இந்த முடிவுக்கு வருதல் கூடாது, என்றான் மன்னன். உடன் ஏரண்ட முனிவர் :—

'மன்னா! உலகத்தில் உள்ள அனைவரின் நன்மையின் பொருட்டு எனது உடலைத் துறக்கின்றேன். மேலும் சிவனுடைய சந்நிதியில் இவ்வுடலைத் துறப்பதால் எனக்கு சிவசாயுஜ்யம் கிடைக்கும். இதனால் உனக்கு எந்த தோஷமும் ஏற்படாது, என்று கூறியதும் மலர் மழை பொழிந்தது. தேவர்கள் வானில் கூடி துந்துபிகளை முழங்கினர்.

ஹேரண்ட முனிவர் காவிரியில் நீராடி, விபூதி ருத்ராக்ஷங்களைத்தரித்துக் கொண்டு சிவனையும், வெள்ளை விநாயகரையும் வணங்கினார். சிவனை தியானித்த வண்ணம் பொந்தில் குதித்தார். அந்தப்பொந்திலிருந்து ஒரு லிங்கம் வெளிப்பட்டது. அதன் பெயர் ஹேரண்டலிங்கம் என்று புகழ்பெற்றது. உடனே வழக்கம் போல் காவிரி ஓட ஆரம்பித்தது. வானுலக ரதத்திலிருந்து ஹேரண்ட முனிவர் பேசலானார்.

மன்னா! மக்களின் நன்மையின் பொருட்டு எனது உடலைத் துறந்து கைலாயம் செல்கிறேன். நான் வழிபட்டு வந்த 'கொட்டையூர்' ஆலயத்திற்குத் திருப்பணி செய்வாயாக. என்றார்.

அவரது விருப்பப்படியே கொட்டையூர் கோடீஸ்வரரின் ஆலயத்தைக் கட்டினான். வலஞ்சுழியில், கோபுரம்,

